17. தனியுரிமைப் போட்டிச் சந்தையானது
    (1) ஒரு தனி நிறுவனத்தைக் கொண்டுள்ள சந்தை அமைப்பாகும்.
    (2) சிறு எண்ணிக்கையிலான நிறுவனங்களைக் கொண்டுள்ள சந்தை அமைப்பாகும்.
    (3) ஓரினத்தன்மை கொண்ட பொருள்களை உற்பத்தி செய்யும் அதிக எண்ணிக்கையிலான நிறுவனங்கள் காணப்படும் சந்தை அமைப்பாகும்.
    (4) வேறாக்கம் செய்யப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்யும் அதிக எண்ணிக்கையிலான நிறுவனங்கள் காணப்படும் சந்தை அமைப்பாகும்.
    (5) விளம்பரம் காணப்படாத சந்தை அமைப்பாகும்.

18. மொத்த உள்நாட்டு உற்பத்தியானது
    (1) தரப்பட்ட வருடமொன்றில் பரிமாற்றம் செய்யப்பட்ட மொத்த பொருள்கள் சேவைகளின் பெறுமதியாகும்.
    (2) தரப்பட்ட வருடமொன்றில் மேற்கொள்ளப்பட்ட பங்குகளின் கொள்வனவு, முறிகளின் விற்பனை போன்ற நிதிப் பரிமாற்றங்களை உள்ளடக்கியதாகும்.
    (3) உற்பத்தியின் இடைநிலையில் வாங்கப்பட்ட பொருள்களை உள்ளடக்கியதாகும்.
    (4) தரப்பட்ட வருடமொன்றில் உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட எல்லா இறுதி நுகர்வுப் பொருள்கள் சேவைகள் மீது மேற்கொள்ளப்பட்ட மொத்த செலவீடுகளின் கூட்டுத்தொகையாகும்.
    (5) தரப்பட்ட வருடமொன்றில் உற்பத்தி செய்யப்பட்ட எல்லாப் பொருள்கள் சேவைகளையும் உள்ளடக்குகின்றது.

19. வர்த்தக சகடோட்டமொன்றின் விரிவாக்கக் கட்டத்தில் பின்வருவனவற்றில் எது பெரும்பாலும் நிகழக்கூடும் ?
    (1) மெய் மொத்த உள்நாட்டு உற்பத்தி அதிகரிக்கும் அதேவேளை வேலையின்மை வீழ்ச்சியடையும்.
    (2) மெய் மொத்த உள்நாட்டு உற்பத்தி, வேலையின்மை என்பன அதிகரிக்கும்.
    (3) மெய் மொத்த உள்நாட்டு உற்பத்தி குறைவடையும் அதேவேளை பணவீக்கம் உயரும்.
    (4) வட்டி வீதங்கள் உயரும் அதேவேளை தோல்வியடையும் வர்த்தக முயற்சிகளின் எண்ணிக்கை உயரும்.
    (5) பணவீக்கம் உயரும் அதேவேளை தொழில் வாய்ப்புகள் வீழ்ச்சியடையும்.

20. பின்வருவனவற்றுள் ஒன்றைத் **தவிர** ஏனையவை யாவும் மொத்த உள்நாட்டு உற்பத்திக் கணிப்பீட்டில் உள்ளடக்கப்படுவதில்லை. அது எது ?
    (1) இடைநிலைப் பொருள்களின் பெறுமதி
    (2) கருதப்படும் ஆண்டில் கட்டப்பட்ட சகல வீடுகளின் பெறுமதி
    (3) ஏற்கனவே உபயோகிக்கப்பட்ட பொருள்களின் பெறுமதி
    (4) தூய நிதிசார் கொடுக்கல் வாங்கல்கள்
    (5) அரசாங்கத்திடமிருந்து பெறப்படும் மானியங்கள்

21. பொருளாதாரமொன்றின் தெரிவு செய்யப்பட்ட பேரினப் பொருளாதாரத் தரவுகள் கீழே தரப்படுகின்றன. (புள்ளிவிபரங்கள் பில்லியன் ரூபாயில்)

| | |
|---|---|
| அரசாங்கக் கொள்வனவுகள் | 500 |
| கூலிகளும் ஏனைய ஊழிய வருமானங்களும் | 2 000 |
| பெறுமானத்தேய்வு | 400 |
| மொத்த முதலீடு | 400 |
| தனியார் நுகர்வு | 2 200 |
| தேறிய ஏற்றுமதிகள் | –50 |
| தேறிய நேரில் வரிகள் | 150 |

சந்தை விலைகளிலான தேறிய உள்நாட்டு உற்பத்தியின் அளவு
    (1) ரூபா 2 650 பில்லியன் (2) ரூபா 3 050 பில்லியன் (3) ரூபா 3 150 பில்லியன்
    (4) ரூபா 3 400 பில்லியன் (5) ரூபா 4 650 பில்லியன்

22. பொருளாதாரமொன்று சமநிலையில் இயங்குவதாகக் கருதுக. இப்பொருளாதாரத்தின் ஏற்றுமதிகள் ரூபா 400 மில்லியன் ஆகவும் இறக்குமதிகள் ரூபா 500 மில்லியன் ஆகவும் வரிகள் ரூபா 1 200 மில்லியன் ஆகவும் அரசாங்கக் கொள்வனவுகள் ரூபா 1 500 மில்லியன் ஆகவும் சேமிப்புகள் ரூபா 1 000 மில்லியன் ஆகவுமிருப்பின் முதலீட்டு மட்டத்தின் அளவு
    (1) ரூபா 700 மில்லியன் ஆகும். (2) ரூபா 800 மில்லியன் ஆகும். (3) ரூபா 1 000 மில்லியன் ஆகும்.
    (4) ரூபா 1 200 மில்லியன் ஆகும். (5) ரூபா 1 300 மில்லியன் ஆகும்.

23. பின்வருவனவற்றில் எது மொத்தக் கேள்வியில் மிகப் பெரிய அதிகரிப்பை ஏற்படுத்தும் ?
    (1) வரிகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பு
    (2) வரிகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் வீழ்ச்சி
    (3) அரசாங்கக் கொள்வனவுகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பு
    (4) அரசாங்கக் கொள்வனவுகளில் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பும் வரிகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பும்
    (5) அரசாங்கக் கொள்வனவுகளில் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பும் வரிகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் வீழ்ச்சியும்

24. பொருளாதாரமொன்றின் தன்னிச்சையான செலவீடுகளில் ஏற்படும் ரூபா 100 மில்லியன் அதிகரிப்பு மெய் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் ரூபா 500 மில்லியன் அதிகரிப்பினை ஏற்படுத்துமாயின் அப்பொருளாதாரத்தில் எல்லை நுகர்வு நாட்டம்
    (1) 0.2 ஆகும். (2) 0.4 ஆகும். (3) 0.5 ஆகும். (4) 0.8 ஆகும். (5) 5.0 ஆகும்.

25. பொருளாதாரமொன்றின் பெயரளவு மொத்தத் தேசிய உற்பத்தி ரூபா 5 000 பில்லியனாகவும் பண நிரம்பல் ரூபா 1 000 பில்லியனாகவும் இருப்பின் அப்பொருளாதாரத்தின் பணப்புழக்கச் சுற்றோட்ட வேகம்
    (1) 0.2 ஆகும். (2) 0.5 ஆகும். (3) 5 ஆகும். (4) 4 000 ஆகும். (5) 6 000 ஆகும்.

[பக். 5 ஐப் பார்க்க

26. பின்வரும் வரைபடம் வெவ்வேறு மொத்தக் கேள்வி நிலைமைகளின் கீழ்க் காணப்படும் பல்வேறு சமநிலை வருமான மட்டங்களைக் காட்டுகிறது.




$Y_F$ என்பது நிறைதொழில் மட்ட வருமானமாயின் பின்வருவனவற்றில் எந்த இடைவெளி பணவீக்க இடைவெளியைக் குறிக்கும் ?

(1) SH
(2) RH
(3) LG
(4) $Y_FR$
(5) $Y_2G$

27. ஒதுக்குத் தேவை 20% ஆகவும் வங்கி முறைமையில் ரூபா 100 மில்லியன் பெறுமதியான மிகையொதுக்குகளும் காணப்படுமாயின் பணநிரம்பலில் ஏற்படக்கூடிய உச்ச அதிகரிப்பின் அளவு

(1) ரூபா 20 மில்லியனாகும். (2) ரூபா 100 மில்லியனாகும். (3) ரூபா 300 மில்லியனாகும்.
(4) ரூபா 500 மில்லியனாகும். (5) ரூபா 750 மில்லியனாகும்.

28. பணத்தைப் பணமாக வைத்திருப்பதற்கான பொதுமக்களின் ஆர்வம் அதிகரிக்குமாயின் வங்கி முறைமையின் மீது அது ஏற்படுத்தும் தாக்கம் என்ன ?

(1) வங்கிகள் தமது திரவச் சொத்துக்களை அதிகரிக்கக் கூடியதாக இருக்கும்.
(2) வங்கிகள் தமது இலாபச் சொத்துக்களை அதிகரிக்கக் கூடியதாக இருக்கும்.
(3) வங்கிகள் தாம் அறவிடும் வட்டி வீதங்களை குறைப்பது கடினமாக இருக்கும்.
(4) வங்கிகள் கடன்களை மேலும் விரிவாக்கக் கூடியதாக இருக்கும்.
(5) வங்கிகள் கடன்களை மேலும் விரிவாக்க முடியாத நிலை எற்படும்.

29. வங்கி முறைமையிலுள்ள ஒதுக்குகளின் அளவு ரூபா 100 பில்லியனாகவும் வைப்புக்களின் அளவு ரூபா 800 பில்லியனாகவும் பொதுமக்கள் வசமுள்ள நாணயம் ரூபா 200 பில்லியனாகவும் காணப்படுகின்றன. இந்நிலையில் பணப்பெருக்கியின் அளவு

(1) 0.30 ஆகும். (2) 0.37 ஆகும். (3) 2.70 ஆகும். (4) 2.95 ஆகும். (5) 3.33 ஆகும்.

30. திறந்த சந்தையில் அரச முறிகளைக் கொள்வனவு செய்யும் மத்திய வங்கியின் நடவடிக்கை காரணமாக

(1) வங்கிகளின் ஒதுக்குகள் அதிகரித்து பண அடித்தளம் விரிவடையும்.
(2) வங்கிகளின் ஒதுக்குகள் வீழ்ச்சியடைந்து பண அடித்தளம் சுருக்கமடையும்.
(3) வங்கிகளின் ஒதுக்குகள் அதிகரித்து பண அடித்தளம் சுருக்கமடையும்.
(4) வங்கிகளின் ஒதுக்குகள் வீழ்ச்சியடைந்து பண அடித்தளம் விரிவடையும்.
(5) வங்கிகள் மிகை ஒதுக்குகளைக் கொண்டிருப்பின் வங்கிகளின் ஒதுக்குகள் வீழ்ச்சியடையும். ஆனால் பணநிரம்பல் அதிகரிக்கும்.

31. பின்வருவனவற்றில் சந்தைத் தோல்வியொன்றை சீர்செய்வதற்காக அரசு தலையீடு செய்வதற்கான காரணமாக அமைவது எது ?

(1) இழிவுப் பண்டங்கள் காணப்படல்
(2) அளவுத்திட்டச் சிக்கனமிலிகள் உருவாதல்
(3) உற்பத்தியிலும் நுகர்விலும் வெளிவாரிகள் காணப்படல்
(4) ஓரினத்தன்மை வாய்ந்த உற்பத்திகள் காணப்படல்
(5) விளம்பரம் மேற்கொள்ளப்படல்

32. பின்வரும் அட்டவணையானது நிலக்கரியினால் இயங்கும் மின்சார நிலையமொன்றை அமைப்பதனால் ஏற்படும் தனியார் மற்றும் வெளிவாரிச் செலவுகள் மற்றும் நன்மைகளைக் காட்டுகிறது. (புள்ளிவிபரங்கள் ரூபா பில்லியனில்)

| (ரூபா மில்லியனில்) | |
|---|---|
| தனியார் நன்மை | 180 |
| தனியார் செலவு | 190 |
| வெளிவாரி நன்மை | 110 |
| வெளிவாரிச் செலவு | 140 |

சமூகச் செலவீட்டிலிருந்து சமூக நன்மையைக் கழித்தால் வருவது

(1) ரூபா 120 பில்லியன். (2) ரூபா 50 பில்லியன். (3) ரூபா 40 பில்லியன்.
(4) ரூபா 30 பில்லியன். (5) ரூபா 10 பில்லியன்.

[பக். 6 ஐப் பார்க்க

33. அருமையான வளங்களை உத்தமமான விதத்தில் ஒதுக்கீடு செய்வதில் தாராள சந்தைகள் தோல்வியடைவதற்கு ஒரு காரணமாக அமைவது
(1) பொதுப் பொருள்கள் அதன் உபயோகிப்பாளருக்கு இலவசமாக வழங்கப்படுகின்றமையாகும்.
(2) நேர்கணிய வெளிவாரிகள் பொருளொன்றின் மிகையுற்பத்திக்கு இட்டுச் செல்வதாகும்.
(3) நேர்கணிய வெளிவாரிகளைக் கொண்டுள்ள பொருள்கள் குறைவாக உற்பத்தி செய்யப்படுகின்றமையாகும்.
(4) தனிநபர்களின் வருமானங்களும் செல்வமும் ஒன்றுக்கொன்று சமமாகக் காணப்படாமையாகும்.
(5) போட்டித்தன்மை நிலவுவதாகும்.

34. பின்வரும் வரைபடம் மேன்மைப் பொருளொன்றின் கேள்வி நிரம்பல் வளையியைக் காட்டுகிறது.




இதன் நுகர்வை $0Q_1$ இலிருந்து $0Q_2$ வாக அதிகரிக்க வேண்டுமாயின் அரசாங்கமானது
(1) பொருள் அலகொன்றிற்கு $P_3P_2$ அளவு வரியினை உற்பத்தியாளர் மீது விதிக்கலாம்.
(2) பொருள் அலகொன்றிற்கு $P_3P_1$ அளவு மானியத்தை உற்பத்தியாளருக்கு வழங்கலாம்.
(3) $0P_3$ அளவு உயர்ந்தபட்ச விலையினை விதிக்கலாம்.
(4) $0P_2$ அளவு குறைந்தபட்ச விலையினை விதிக்கலாம்.
(5) $0P_1$ விலையில் உத்தரவாத விலையொன்றை அறிமுகஞ் செய்யலாம்.

35. பொருளாதாரம் தீவிரமான மந்தநிலையில் உள்ளபோது பின்வருவனவற்றில் உற்பத்தியை ஊக்குவிக்க வினைத்திறன் மிக்க இறைக்கொள்கையாக அமைவது எது ?
(1) அரசாங்க செலவீட்டு அதிகரிப்பு
(2) அரசாங்க செலவீட்டு வீழ்ச்சி
(3) தனிநபர் வரிகள் அதிகரிக்கப்படல்
(4) திறந்த சந்தையில் மத்திய வங்கி பிணையங்களை விற்பனை செய்தல்
(5) திறந்த சந்தையில் மத்திய வங்கி பிணையங்களை கொள்வனவு செய்தல்

36. பின்வரும் அட்டவணை X மற்றும் Y ஆகிய நாடுகளில் ஓர் அலகு உணவை அல்லது ஓர் அலகு ஆடையை உற்பத்தி செய்யத் தேவையான ஊழிய மணித்தியாலங்களைக் காட்டுகிறது.

| நாடு | உணவு | ஆடை |
|---|---|---|
| X | 20 மணித்தியாலம் | 50 மணித்தியாலம் |
| Y | 10 மணித்தியாலம் | 20 மணித்தியாலம் |

இத்தரவுகளின் அடிப்படையில் பின்வரும் கூற்றுகளில் சரியானது எது ?
(1) உணவு மற்றும் ஆடை உற்பத்தியில் X நாடு ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளது.
(2) உணவு மற்றும் ஆடை உற்பத்தியில் Y நாடு ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளது.
(3) X நாடு உணவு உற்பத்தியிலும் Y நாடு ஆடை உற்பத்தியிலும் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளன.
(4) Y நாடு உணவு உற்பத்தியிலும் X நாடு ஆடை உற்பத்தியிலும் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளன.
(5) எந்தப் பொருள் உற்பத்தியிலும் எந்த ஒரு நாடும் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டிருக்கவில்லை.

37. பின்வரும் கருதுகோள் ரீதியான சென்மதி நிலுவைத் தரவுகளைக் கருதுக.

| வகை | பெறுமதி (பில்லியன் ரூபா) |
|---|---|
| பொருள் ஏற்றுமதி | 11 000 |
| பொருள் இறக்குமதி | 13 000 |
| தேறிய சேவைகள் | 200 |
| தேறிய வருமானங்கள் | −2 000 |
| தேறிய நடைமுறை மாற்றல்கள் | −100 |

சென்மதி நிலுவையின் நடைமுறைக் கணக்கு நிலுவை
(1) ரூபா 4 100 பில்லியன் குறைநிலையைக் காட்டுகிறது.
(2) ரூபா 3 900 பில்லியன் குறைநிலையைக் காட்டுகிறது.
(3) ரூபா 120 பில்லியன் குறைநிலையைக் காட்டுகிறது.
(4) ரூபா 2 188 பில்லியன் மிகைநிலையைக் காட்டுகிறது.
(5) ரூபா 120 பில்லியன் மிகைநிலையைக் காட்டுகிறது.

[பக். 7 ஐப் பார்க்க

38. நாடொன்றின் சென்மதி நிலுவையின் பொருள்கள் கணக்கின் ஒரு நேர்கணிய மீதியானது கட்டாயமாக
   (1) வர்த்தக மாற்றுவீதச் சுட்டெண் முன்னைய ஆண்டைவிட அதிகரித்துள்ளதைக் குறிக்கின்றது.
   (2) பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்ட அளவைவிட அவற்றின் ஏற்றுமதிகள் அதிகரித்துள்ளதைக் குறிப்பிடும்.
   (3) நடைமுறைக் கணக்கு மீதியில் ஒரு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளமையைக் கருதும்.
   (4) ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் பெறுமதியைவிட இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் பெறுமதிகள் குறைவாக இருப்பதைக் காட்டும்.
   (5) ஏற்றுமதி விலைகள் இறக்குமதி விலைகளைவிட உயர்வாக உள்ளதைக் காட்டும்.

39. A என்னும் நாடு எல்லாப் பொருள்களையும் உற்பத்தி செய்வதில் முழுமையான நன்மையினைக் கொண்டிருப்பின்
   (1) A நாடு எல்லாவற்றிலும் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டிருப்பதனால் வர்த்தகம் இடம்பெற மாட்டாது.
   (2) எந்த ஒரு நாடும் எந்த ஒரு பொருள் தொடர்பிலும் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டிருக்காத படியினால் வர்த்தகம் இடம்பெற மாட்டாது.
   (3) வர்த்தகம் பெரும்பாலும் இடம்பெறலாம். அத்துடன் எல்லா நாடுகளும் நன்மையடையும்.
   (4) வர்த்தகம் பெரும்பாலும் இடம்பெறலாம். ஆனால் A நாடு நன்மையடைய மாட்டாது.
   (5) வர்த்தகம் பெரும்பாலும் இடம்பெறலாம். ஆனால் A நாடு மட்டுமே நன்மையடையும்.

40. டொலருக்கும் இலங்கை ரூபாவுக்கும் இடையிலான நாணய மாற்றுவீதம் \$1 = ரூபா 110 இலிருந்து \$1 = ரூபா 135 ஆக மாற்றமடையுமாயின்
   (1) ரூபா பெறுமதியில் அதிகரிப்பு ஏற்படும் அதேவேளை டொலர் பெறுமதி தேய்வுக்குட்படும்.
   (2) இலங்கையின் பொருள்கள் அமெரிக்கர்களுக்கு மலிவானதாக மாறும். அத்துடன் இலங்கையிலிருந்தான அமெரிக்காவின் இறக்குமதிகள் அதிகரிக்கும்.
   (3) இலங்கையின் பொருள்கள் அமெரிக்கர்களுக்கு விலை கூடியதாக மாறும். அத்துடன் இலங்கையிலிருந்தான அமெரிக்காவின் இறக்குமதிகள் அதிகரிக்கும்.
   (4) இலங்கையின் பொருள்கள் அமெரிக்கர்களுக்கு விலை கூடியதாக மாறும். அத்துடன் இலங்கையிலிருந்தான இறக்குமதிகள் வீழ்ச்சியடையும்.
   (5) இலங்கையின் பொருள்கள் அமெரிக்கர்களுக்கு மலிவானதாக மாறும். அத்துடன் இலங்கையிலிருந்தான அமெரிக்காவின் இறக்குமதிகள் வீழ்ச்சியடையும்.

41. நெகிழ்த்தன்மை வாய்ந்த நாணயமாற்றுவீத முறைமையின் கீழ் சென்மதி நிலுவையில் ஏற்படும் தற்காலிக சமமின்மைகளை கையாள்வதற்கான பிரதான பொறிமுறையாக அமைவது
   (1) கடுமையான நாணய மாற்றுவீதக் கட்டுப்பாடுகளை அமுல் செய்வதாகும்.
   (2) நாணயமானது மிகைநிலை நாடுகளிலிருந்து குறைநிலை நாடுகளை நோக்கி பாய்வதாகும்.
   (3) நாணய மதிப்பிறக்கம் அல்லது மதிப்பேற்றத்தை மேற்கொள்வதாகும்.
   (4) நாணயப் பெறுமதித்தேய்வு அல்லது பெறுமதி அதிகரிப்பு என்பவற்றிற்கு ஊடாகவாகும்.
   (5) இறுக்கமான இறைக்கொள்கையைக் கையாள்வதாகும்.

42. பின்வரும் வரைபடத்தில் A மற்றும் B ஆகிய நாடுகளின் லோரன்ஸ் வளையிகள் காட்டப்பட்டுள்ளன.

வரைபடத்தின்படி பின்வருவனவற்றில் சரியான கூற்றாக அமைவது எது ?
   (1) B நாட்டைவிட A நாட்டில் சமமான வருமான பரம்பல் நிலவுகிறது.
   (2) B நாட்டைவிட A நாடு சமமற்ற வருமானப் பரம்பலைக் கொண்டுள்ளது.
   (3) A நாட்டின் கிணி குணகம் 1 இற்கு சமமாகும்.
   (4) B நாட்டின் கிணி குணகம் 1 இற்கு சமமாகும்.
   (5) A நாட்டின் கிணி குணகம் B நாட்டின் கிணி குணகத்தைவிட உயர்வானதாகும்.

100%
வருமானத்தின் சதவீதம்
A
B
0% வீட்டுத்துறை சதவீதம் 100%

43. பெயரளவு நாணய மாற்றுவீதத்தைப் பயன்படுத்தி கணிப்பிடப்பட்ட ஐக்கிய அமெரிக்க டொலரிலான தலைக்குரிய மொத்தத் தேசிய உற்பத்தியானது உயர் வருமானம் பெறும் நாடுகள் மற்றும் குறைந்த வருமானம் பெறும் நாடுகள் என்பவற்றில் நிலவும் ஒப்பீட்டு ரீதியான வாழ்க்கைத் தரத்தை அளவிடுவதில் குறைபாடுடைய ஒரு சுட்டியாகும். ஏனெனில்
   (1) பெயரளவு நாணய மாற்றுவீதம், கொள்வனவு சக்தி சமநாணய மாற்றுவீதம் என்பவற்றிற்கிடையில் வேறுபாடு நிலவுகிறது.
   (2) நாடுகளின் சனத்தொகை வளர்ச்சி வீதங்களில் வேறுபாடு நிலவுகிறது.
   (3) விலை மாற்ற வீதங்கள் மற்றும் கூலித்தூண்டற் பணவீக்கம் என்பவற்றிற்கிடையே வேறுபாடு நிலவுகிறது.
   (4) தேசிய வருமானத்தில் இறக்குமதிகளின் விகிதாசாரங்கள் வேறுபடுகின்றன.
   (5) பெயரளவு பயனுறுதி வாய்ந்த நாணய மாற்றுவீதங்கள் வேறுபடுகின்றன.

[பக். 8 ஐப் பார்க்க

44. பின்வரும் நிகழ்வுகளின் எந்தச் சேர்க்கையின் ஊடாக நாடொன்றின் நீண்டகாலப் பொருளாதார வளர்ச்சி ஊக்குவிக்கப்படக் கூடும் ?

| | சேமிப்பு வீதம் | முதலீடு | வட்டிவீதம் |
|---|---|---|---|
| (1) | உயர்வு | உயர்வு | உயர்வு |
| (2) | உயர்வு | உயர்வு | குறைவு |
| (3) | உயர்வு | குறைவு | குறைவு |
| (4) | குறைவு | குறைவு | குறைவு |
| (5) | உயர்வு | குறைவு | உயர்வு |

45. நாடொன்றின் சில குடித்தொகைத் தரவுகள் கீழே தரப்பட்டுள்ளன. (தரவுகள் மில்லியனில்)

| | |
|---|---|
| சனத்தொகை | 60 |
| தொழில் செய்யும் வயது சனத்தொகை | 50 |
| தொழிற்படையின் எண்ணிக்கை | 30 |
| தொழில் செய்யும் சனத்தொகை | 28 |
| தொழிலற்ற சனத்தொகை | 02 |

மேற்படி தரவுகளின் அடிப்படையில் இப்பொருளாதாரத்தில் தொழிற்படையின் பங்கு கொள்ளல் வீதம் என்ன ?

(1) 40% ஆகும்.　(2) 56% ஆகும்.　(3) 60% ஆகும்.　(4) 75% ஆகும்.　(5) 93.3% ஆகும்.

46. பொருளாதார வளர்ச்சி பொதுவாக அளவிடப்படுவது
(1) சில்லறை விற்பனை விலைச்சுட்டெண்ணின் வருடாந்த மாற்றத்தினாலாகும்.
(2) மெய்த் தேசிய உற்பத்தியின் வருடாந்த மாற்றத்தினாலாகும்.
(3) ஆக்கக் கைத்தொழிலின் வெளியீட்டில் ஏற்படும் வருடாந்த மாற்றத்தினாலாகும்.
(4) நுகர்வுச் செலவீட்டில் ஏற்படும் வருடாந்த மாற்றத்தினாலாகும்.
(5) முதலீட்டு வீதத்தில் ஏற்படும் மாற்றத்தினாலாகும்.

47. இலங்கையின் தங்கிவாழ்வோர் வீதம் வரைவிலக்கணப்படுத்தப்படுவது
(1) சிறுவர்களின் எண்ணிக்கையை வளர்ந்தோர் சனத்தொகையின் சதவீதமாகக் காட்டுவதன் மூலமாகும்.
(2) தொழிலற்றிருப்போரை தொழில் புரிவோர் எண்ணிக்கையின் சதவீதமாகக் காட்டுவதன் மூலமாகும்.
(3) தொழில்புரியும் வயதுச் சனத்தொகையின் சதவீதமாக தொழில்புரியாத சனத்தொகையைக் கணிப்பிடுவதன் மூலமாகும்.
(4) 65 வயதுக்கு மேற்பட்ட சனத்தொகையின் சதவீதத்தைக் கணிப்பிடுவதன் மூலமாகும்.
(5) 15 வயதுக்குக் குறைந்த மற்றும் 64 வயதுக்கு மேற்பட்ட சனத்தொகையின் சதவீதத்தைக் கணிப்பிடுவதன் மூலமாகும்.

48. மானுட அபிவிருத்திச் சுட்டெண்ணின் ஒரு கூறாக அமைவது எது ?
(1) 12 ஆண்டுகள் பாடசாலைக் கல்வியைப் பூர்த்தி செய்தோர் சதவீதம்
(2) நாளாந்த சராசரி புரத உட்கொள்ளல்
(3) பிறப்பின்போது ஆயுள் எதிர்பார்க்கை
(4) வளர்ந்தோர் எழுத்தறிவு வீதம்
(5) சனத்தொகையில் 1 000 நபர்களுக்கான வைத்தியர்களின் எண்ணிக்கை

49. BRICS நாடுகள் வரிசையில் உள்ளடங்கும் நாடுகள்
(1) வங்காளதேசம், ரஷ்யா, இந்தியா, சீனா மற்றும் தென்கொரியா
(2) பிரேசில், ரஷ்யா, இந்தியா, சீனா மற்றும் தென்கொரியா
(3) வங்காளதேசம், ரஷ்யா, இந்தியா, சீனா, சிங்கப்பூர்
(4) பிரேசில், ரஷ்யா, இந்தியா, சீனா மற்றும் தென்னாபிரிக்கா
(5) பிரேசில், ரஷ்யா, இந்தோனேசியா, சீனா மற்றும் தென்கொரியா

50. இலங்கையின் பின்வரும் மாகாணங்களில் தற்போது மிகவுயர்ந்த தலைக்குரிய வறுமைக் குறிகாட்டியைக் கொண்டுள்ள மாகாணம் எது ?
(1) வட மாகாணம்　(2) கிழக்கு மாகாணம்　(3) வடமேல் மாகாணம்
(4) ஊவா மாகாணம்　(5) சப்பிரகமுவ மாகாணம்

***

12906



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ආර්ථික විද්‍යාව II
பொருளியல் II
Economics II

21 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

- **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
- உபபிரிவு **'அ'**, உபபிரிவு **'ஆ'** ஆகியவற்றிலிருந்து குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களையேனும் தெரிவு செய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
- வரைபுத் தாள்கள் வழங்கப்படும்.

## உப பிரிவு 'அ'

(இப்பிரிவிலிருந்து குறைந்தபட்சம் **இரு** வினாக்களைத் தெரிவு செய்க.)

1. (i) பொருளாதார வளங்களை நீர் எவ்வாறு வரைவிலக்கணப்படுத்துவீர் ? நீர் அவற்றை எவ்வாறு வகைப்படுத்துவீர் ? (04 புள்ளிகள்)
   (ii) முயற்சியாளரின் பிரதான தொழிற்பாடுகள் எவை ? (04 புள்ளிகள்)
   (iii) உற்பத்தியின் வினைத்திறன் (productive efficiency) மற்றும் ஒதுக்கீட்டு வினைத்திறன் (allocative efficiency) என்பவற்றை வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)
   (iv) அமையச் செலவு எண்ணக்கருவினை விளக்குக. அருமையான வளங்களை மாற்றுப் பயன்பாடுகளிடையே தெரிவு செய்யும் பிரச்சினையோடு அது எவ்வாறு தொடர்புபடுகின்றது என்பதை ஆராய்க. (04 புள்ளிகள்)
   (v) கட்டளைப் பொருளாதாரம் மற்றும் சந்தைப் பொருளாதாரம் என்பவற்றுக்கிடையிலான வேறுபாடுகளைக் கூறுக. (04 புள்ளிகள்)

2. (i) 'கேள்வி விதியினை' விளக்குக. கேள்வி வளையியானது ஏன் கீழ் நோக்கிச் சரிகின்றது ? (04 புள்ளிகள்)
   (ii) பொருளொன்றின் சந்தைக் கேள்வி மற்றும் நிரம்பல் வளையிகளைப் பின்வரும் சமன்பாடுகள் விபரிக்கின்றன.

   $Q_d = 50 - 5P$

   $Q_s = -10 + 5P$

   சமன்பாடுகளைத் தீர்த்து சமநிலை விலை, சமநிலைத் தொகை என்பவற்றை நிர்ணயிக்குக. (04 புள்ளிகள்)
   (iii) சமநிலை விலையில் விலைக் கேள்வி நெகிழ்ச்சியினைக் கணிப்பிடுக. (02 புள்ளிகள்)
   (iv) இச்சந்தையிலுள்ள உற்பத்தியாளர்களுக்கு அலகொன்றுக்கு 8 ரூபா உத்தரவாத விலையினை அரசாங்கம் அறிமுகஞ் செய்வதாக கருதுக. இவ் விலை ஆதரவுத் திட்டத்தினால் அரசாங்கத்திற்கு ஏற்படும் மொத்தச் செலவு எவ்வளவு ? (04 புள்ளிகள்)
   (v) உத்தரவாத விலையின் கீழ் நுகர்வோன் மிகை மற்றும் உற்பத்தியாளன் மிகை என்பவற்றின் பெறுமதியை மதிப்பீடு செய்க. (06 புள்ளிகள்)

3. (i) குறுங்கால உற்பத்தித் தொழிற்பாடு என்பதனாற் கருதப்படுவதென்ன ? (02 புள்ளிகள்)
   (ii) 'குறைந்து செல்லும் விளைவு விதி' என்றால் என்ன ? குறுங்கால செலவு வளையிகளின் வடிவத்தில் அது எத்தகைய விளைவுகளைக் கொண்டுள்ளது ? (04 புள்ளிகள்)
   (iii) கணக்கியல் இலாபம் மற்றும் பொருளியல் இலாபம் ஆகிய எண்ணக்கருக்கள் எவ்வாறு வேறுபடுகின்றன ? (04 புள்ளிகள்)
   (iv) விலை உருவாக்குவோன் (Price maker) மற்றும் விலை ஏற்போன் (Price taker) ஆகிய எண்ணக்கருக்களால் கருதப்படுவதென்ன ? (04 புள்ளிகள்)
   (v) தனியுரிமைப் போட்டியிலிருந்து சிலருரிமையை வேறுபடுத்துவது எது ? (06 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

4. (i) வீட்டுத்துறையினர் மற்றும் நிறுவனத்துறை என்பவற்றிற்கூடாக இடம்பெறும் பொருள்கள், சேவைகள் மற்றும் வளங்களின் வட்டப்பாய்ச்சலை வரைந்து காட்டுக. அவ்வாறே பணப் பாய்ச்சல்களையும் வரைந்து காட்டுக. அப்பாய்ச்சல்கள் ஒவ்வொன்றும் செல்லும் திசையினைக் குறித்துக் காட்டுக. (04 புள்ளிகள்)

(ii) பொருளாதாரமொன்றின் மொத்த வெளியீடானது அடிப்படையில் அதன் மொத்த வருமானமாகவும் கருதப்படுவது ஏன் என விளக்குக. (02 புள்ளிகள்)

(iii) சில உற்பத்தி நடவடிக்கைகள் கணிப்பிடப்படாமைக்கும் அதன் காரணமாக மொத்த உள்நாட்டு உற்பத்திக் கணிப்பீட்டில் உள்ளடக்கப்படாமைக்கும் காரணமென்ன ? (04 புள்ளிகள்)

(iv) பின்வருவனவற்றில் நடப்பு வருடத்தின் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் உள்ளடக்கப்படுபவை எவை ? உமது ஒவ்வொரு விடையினையும் விளக்குக.

(அ) கம்பனி முறிகளிலிருந்து கிடைத்த வட்டி வருவாய்

(ஆ) ஓய்வு பெற்ற அரச ஊழியரொருவர் பெற்ற ஓய்வூதியக் கொடுப்பனவு

(இ) காப்புறுதி ஒன்றைக் கொள்வனவு செய்தல்

(ஈ) நிதிக்கம்பனியொன்றின் 100 பங்குகளைக் கொள்வனவு செய்தல்

(உ) மாடிக்குடியிருப்பொன்றை வாடகைக்கு விட்டதன் மூலம் பெற்ற வருவாய் (05 புள்ளிகள்)

(v) கீழே தரப்பட்ட தரவுகளைக் கருதுகோள் ரீதியான பொருளாதாரமொன்றிற்கானதாகக் கருதுக. (இலக்கங்கள் ரூபா பில்லியனில்)

| வகை | பெறுமதி | வகை | பெறுமதி |
|---|---|---|---|
| கூலிகள் சம்பளங்கள் மற்றும் ஏனைய ஊழிய வருவாய்கள் | 225 | தேறிய ஏற்றுமதிகள் | 11 |
| நேரில் வரிகள் | 25 | பெறுமானத்தேய்வு | 40 |
| வட்டி வருவாய்கள் | 55 | மானியங்கள் | 20 |
| பங்கிடப்படாத கம்பனி இலாபங்கள் | 72 | கம்பனி வருமான வரிகள் | 18 |
| சொத்து வருவாய்கள் | 34 | பங்கிலாபங்கள் | 16 |
| சுயதொழில் வருவாய்கள் | 80 | வெளிநாட்டுத் தேறிய காரணி வருவாய்கள் | 5 |

மேலுள்ள தரவுகளைப் பயன்படுத்தி சந்தை விலைகளில் மொத்த தேசிய உற்பத்தியைக் கணிப்பிடுக. (05 புள்ளிகள்)

5. (i) சமநிலைமட்ட தேசிய வருமானம் என்பதனால் கருதப்படுவதென்ன என்பதை விளக்குக. தேசிய வருமானமட்டச் சமநிலைக்கு அவசியமான நிபந்தனைகள் யாவை ? (06 புள்ளிகள்)

(ii) சேமிப்புகள் ஏன் ஒரு 'வெளிப்பாய்ச்சலாக'க் கருதப்படுகிறது ? (02 புள்ளிகள்)

(iii) வரிகள் இல்லா நிலையில் பொருளாதாரமொன்றின் நுகர்வு அட்டவணை பின்வருமாறு தரப்படுவதாகக் கொள்க. (இலக்கங்கள் ரூபா பில்லியனில்)

| மொத்த உள்நாட்டு உற்பத்தி (Y) | நுகர்வு (C) | மொத்த உள்நாட்டு உற்பத்தி (Y) | நுகர்வு (C) |
|---|---|---|---|
| 100 | 120 | 400 | 360 |
| 200 | 200 | 500 | 440 |
| 300 | 280 | 600 | 520 |

இந்நுகர்வு அட்டவணைக்கான வரைபினை வரைக. நுகர்வுச் சார்பை பிரதிநிதித்துவப்படுத்தும் சமன்பாட்டைப் பெறுக. (06 புள்ளிகள்)

(iv) தற்போது தொகைவரி முறையொன்று அமுல்படுத்தப்படுவதாகவும் இதனால் அரசாங்கம் சகல மொத்த உள்நாட்டு உற்பத்தி மட்டங்களிலும் ரூபா 20 பில்லியன் வரி வருவாயைத் திரட்டுவதாகவும் கருதுக. இந் நடவடிக்கையின் பின்னரான நுகர்வு அட்டவணையை வரைபிற் காட்டி, புதிய நுகர்வு அட்டவணையை பிரதிநிதித்துவப்படுத்தும் சமன்பாட்டைப் பெறுக. (06 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

## உப பிரிவு 'ஆ'

(இப்பிரிவிலிருந்து குறைந்தபட்சம் **இரு** வினாக்களைத் தெரிவு செய்க.)

6. (i) மக்கள் பணத்திற்கு கேள்வி எழுப்புவதற்கான பிரதான காரணங்கள் யாவை ? (03 புள்ளிகள்)
   (ii) 'அண்மிய பணம்' என்றால் என்ன ? $M_4$ பணநிரம்பலில் உள்ளடங்கும் அண்மிய பணக் கூறுகள் எவை ? (05 புள்ளிகள்)
   (iii) வங்கி முறைமையிலுள்ள வணிக வங்கியொன்றிடம் காசொதுக்குகள் ரூபா 200 பில்லியன், கடன்கள் ரூபா 800 பில்லியன் மற்றும் வைப்புகள் ரூபா 1 000 பில்லியன் உள்ளதாகக் கருதுக.
   (அ) இவ்வங்கியின் ஐந்தொகையினைத் தயார் செய்க. (02 புள்ளிகள்)
   (ஆ) இவ் வங்கியானது 12% ஒதுக்குத் தேவையினைப் பேணுமாயின் அது வழங்கக்கூடிய உச்சக் கடனளவு யாது ? (02 புள்ளிகள்)
   (iv) வைப்பாக்கப் பெருக்கியினால் குறிப்பிடப்படும் பணநிரம்பல் விரிவாக்கத்திலிருந்து பணநிரம்பலின் உண்மையான விரிவாக்கம் வேறுபடுவதற்கான காரணங்கள் யாவை ? (04 புள்ளிகள்)
   (v) பணநிரம்பலில் ஒரு சுருக்கத்தை ஏற்படுத்த மத்திய வங்கி திறந்த சந்தை நடவடிக்கைகளை எவ்வாறு பயன்படுத்துமென விளக்குக. (04 புள்ளிகள்)

7. (i) பின்வரும் வகையிலான ஒவ்வொரு பொருள் சேவைகளையும் வரைவிலக்கணப்படுத்தி ஒவ்வொரு உதாரணம் தருக.
   (அ) உலகப் பொதுப் பொருள்கள்
   (ஆ) பொது வளங்கள்
   (இ) அரைகுறைப் பொதுப் பொருள்கள் (06 புள்ளிகள்)
   (ii) சட்டரீதியான வரித்தாக்கம் மற்றும் பொருளாதார வரித்தாக்கம் என்பவற்றை வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)
   (iii) 'வரிநடுநிலைத்தன்மை' என்பதனாற் கருதப்படுவதென்ன ? (02 புள்ளிகள்)
   (iv) வரவுசெலவு திட்டத்தின் 'ஆரம்பக் குறைநிலை' (primary deficit) மற்றும் 'தேறிய காசுக் குறைநிலை' (net cash deficit) என்பவற்றை வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)
   (v) இலங்கை அரசாங்கத்தின் **வரியல்லா** வருவாய் மூலங்களை இனங்காண்க. (04 புள்ளிகள்)

8. (i) ஒப்பீட்டு நன்மையினை ஏற்படுத்தும் காரணிகள் எவை ? (04 புள்ளிகள்)
   (ii) சென்மதி நிலுவைக் கணக்குகளிலுள்ள பிரதான கணக்குகளும் வகுதிகளும் எவை ? (04 புள்ளிகள்)
   (iii) நாடொன்றின் வர்த்தக மாற்றுவிகிதத்தையும் வர்த்தக நிலுவையையும் வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)
   (iv) சர்வதேச வர்த்தகத்தில் உலக வர்த்தக நிறுவனத்தின் (WTO) பங்கு யாது ? (04 புள்ளிகள்)
   (v) முகாமை செய்யப்பட்ட மிதக்கும் நாணய மாற்றுவீத முறைமையினால் கருதப்படுவதென்ன என்பதை விளக்குக. (04 புள்ளிகள்)

9. (i) 'பொருளாதார வளர்ச்சியையும்' 'பொருளாதார வளர்ச்சி வீதத்தையும்' வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)
   (ii) பொருளாதார வளர்ச்சியின் பிரதான காரணிகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)
   (iii) அபிவிருத்திக்கான ஒரு குறிகாட்டி என்றவகையில் மானுட அபிவிருத்திச் சுட்டெண்ணின் வரையறைகள் யாவை ? (04 புள்ளிகள்)
   (iv) அண்மைக் காலத்தில் இலங்கையின் பல்பரிமாண வறுமையின் போக்குகளைப் பரிசீலனை செய்க. (04 புள்ளிகள்)
   (v) இலங்கையில் பிராந்திய சமமின்மைகளைக் குறைப்பதற்காக தற்போதைய அரசாங்கத்தால் எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளைக் கூறுக. (04 புள்ளிகள்)

10. (i) உலகின் பிரதான கைத்தொழில்மய நாடுகளில் ஏற்பட்டுள்ள பொருளாதார பின்னடைவு மற்றும் மந்த கதியிலான மீட்சி நிலை என்பன இலங்கையின் மீது ஏற்படுத்தும் பொருளாதார விளைவுகள் யாவை ? (05 புள்ளிகள்)
   (ii) "இலங்கையில் அரசுக்கு சொந்தமான தொழில் முயற்சிகளின் (state owned business enterprises) செயலாற்றமானது தொடர்ச்சியாக திருப்தியற்ற நிலையிலேயே உள்ளது". இத்தொழில் முயற்சிகளில் காணப்படும் பிரதான குறைபாடுகளை இனங்காண்க. (05 புள்ளிகள்)
   (iii) இலங்கையில் 1977 - 2004 காலப்பகுதியில் நடைமுறைப்படுத்தப்பட்ட கொள்கைகளுடன் ஒப்பிட்டு, தற்போதைய அபிவிருத்திக் கொள்கையின் பிரதான பண்புகளைக் கூறுக. (05 புள்ளிகள்)
   (iv) திவிநெகும (Divineguma) செயற்றிட்டத்தின் முக்கியமான பண்புகளை இனங்காண்க. (05 புள்ளிகள்)

* * *

**ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව**
**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**
**Department of Examinations, Sri Lanka**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
**General Certificate of Education (Adv. Level) Examination, August 2012**

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

14713

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
**Geography I**

22 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

சுட்டெண்: ........................

அறிவுறுத்தல்கள்:

※ இவ்வினாத்தாள் **இரண்டு** பகுதிகளைக் கொண்டுள்ளது.
※ பகுதி **I, 30** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. பகுதி **I** இற்கான விடைகள் இத்தாளிலேயே எழுதப்பட வேண்டும்.
**குறிப்பு : பென்சிலால் எழுதப்படும் விடைகளுக்குப் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.**
※ பகுதி **I** மற்றும் பகுதி **II** ஆகியவற்றுக்குரிய இரண்டு விடைத்தாள்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு கையளிக்கப்பட வேண்டும்.

**பரீட்சகர்களின் உபயோகத்திற்கு மட்டும்**

| | வினா இல. | புள்ளிகள் |
|---|---|---|
| பகுதி I | 01 - 30 | |
| பகுதி II | 1 | |
| | 2 | |
| | 3 | |
| மொத்தம் | | |

| | கையொப்பம் | குறியீட்டு எண். |
|---|---|---|
| 1 ஆவது பரீட்சகர் | | |
| 2 ஆவது பரீட்சகர் | | |
| மேலதிக பிரதம பரீட்சகர் | | |
| பிரதம பரீட்சகர் | | |
| கணிதப் பரிசோதகர் | | |

## பகுதி I

1. பின்வருவனவற்றுள் எது, மத்தியகோடு குறுக்காகச் செல்லும் ஐந்து நாடுகளின் பெயர்களைச் சரியாகத் தருகின்றது ?
   (1) ஈக்குவடோர், பிறேசில், பொலீவியா, சயர், உகண்டா
   (2) சோமாலியா, கொங்கோ, தன்சானியா, பேரு, கொலம்பியா
   (3) ஈக்குவடோர், கொலம்பியா, கபோன், கெனியா, இந்தோனேசியா
   (4) கெனியா, எதியோப்பியா, கொங்கோ, சயர், இந்தோனேசியா
   (5) பிறேசில், மலேசியா, இந்தோனேசியா, கொங்கோ, சோமாலியா (......)

2. 1 : 50 000 இடவிளக்கப் படத்தினால் எடுத்துக் காட்டப்படும் நிலப் பரப்பளவு என்ன ?
   (1) 1200 $km^2$ (2) 1100 $km^2$ (3) 1000 $km^2$ (4) 800 $km^2$ (5) 400 $km^2$ (......)

3. நெய்யரிப் படத்தின் படி இலங்கையின் மொத்த நிலப் பகுதியை 1 : 50 000 அளவுத்திட்டத்தில் எத்தனை இடவிளக்கவியல் தாள்கள் (sheets) உள்ளடக்கியுள்ளன ?
   (1) 120 (2) 102 (3) 100 (4) 92 (5) 72 (......)

4. 1 : 50 000 அளவுத்திட்ட இடவிளக்கப் படங்களுக்கு அடிப்படையாக அமைந்துள்ள எறியம்,
   (1) உருளை சமபரப்பு (2) குறுக்குக்கோட்டு மேக்காட்டர் (3) உருளை சமதூரம்
   (4) ஹல்லின் எறியம் (5) சான்சன் - பிளம்ஸ்ரட் (......)

5. பின்வரும் கூற்றுக்களில் எது, ஆய்வொன்றில் பண்புரீதியான தரவு சேகரிப்புக்குப் பொருத்தமான முறைகளை மாத்திரம் உள்ளடக்குகின்றது ?
   (1) பங்கேற்பு அவதானிப்பு, நேரடி அவதானிப்பு, முறைசாரா நேர்காணல்கள், விடய ஆய்வுகள்
   (2) பொருத்தமான மாதிரியைத் தெரிவு செய்தல், முறைசாரா நேர்காணல்கள், நேரடி அவதானிப்பு, வினாக்கொத்துக்களை பயன்படுத்தல்
   (3) எடுகோள் பரிசோதனை, பங்கேற்பு அவதானிப்பு, விடய ஆய்வுகள், முறைசாரா நேர்காணல்கள்
   (4) முறைசாரா நேர்காணல்கள், வினாக்கொத்துக்களைப் பயன்படுத்தல், பங்கேற்பு அவதானிப்பு, நேரடி அவதானிப்பு
   (5) மாதிரிகளையும் கோட்பாடுகளையும் உருவாக்கல், நேரடி அவதானிப்பு, விடய ஆய்வுகள், பங்கேற்பு அவதானிப்பு (......)

(பக். 2 ஐப் பார்க்க

6. கூட்டமாக்கப்பட்ட தரவுகளைப் பயன்படுத்தி, சராசரியைப் பெற்றுக் கொள்வதற்குப் பயன்படுத்தப்படும் சூத்திரம், எது ?

(1) $\frac{\sum(X_1 - X_2)}{N}$  (2) $\frac{\sum X_1 + \dots X_2}{\sum n}$

(3) $X_0 + \frac{(\Sigma fd)c}{n}$  (4) $\frac{\sum fd^2}{n} - X_1 + \dots X_2$

(5) $\frac{X - fd}{N} + c$ (……)

7. 25 எண்ணிக்கைகளைக் கொண்ட தரவு ஒழுங்கொன்றின் இடையம்,

(1) உயர்ந்தளவான மற்றும் இழிவளவான எண்ணிக்கைகளைக் கூட்டி இரண்டால் பிரித்துவருவது
(2) 13 ஆவது எண்ணிக்கையின் பெறுமானம்
(3) 13 ஆம், 14 ஆம் எண்ணிக்கைகளைக் கூட்டி இரண்டால் பிரித்து வருவது
(4) 12 ஆவது எண்ணிக்கையின் பெறுமானம்
(5) 12 ஆவது 13 ஆவது எண்ணிக்கைகளைக் கூட்டி இரண்டால் பிரித்துவருவது (……)

8. பின்வரும் வரைபடம் பற்றிய சரியான கூற்று,




(1) தரவுத் தொகுதி ஒன்றில் சராசரி, விலகல் ஆகியவற்றின் பரம்பல்
(2) தரவு வரிசை ஒன்றில் இடையம், விலகல் ஆகியவற்றின் பரம்பல் பாங்கு
(3) தரவுப் பரம்பல் ஒன்றிலுள்ள எல்லா பெறுமானங்களுக்கும் இடையிலான தொடர்பும் நியம விலகலும்
(4) சராசரி மற்றும் நியம விலகலுடன் தொடர்பான மீடிறன் பரம்பலின் பரவல்
(5) தரவுப் பரம்பல் ஒன்றின் மாறிகளின் பரவல் மற்றும் சராசரிக்கிடையிலான தொடர்பு (……)

9. புவியியல் தகவல் முறைமைத் தொழில் நுட்பத்தை **மாத்திரம்** பயன்படுத்தி அமைக்கப்படும் படத்தின் வகையானது,

(1) எண்ணிலக்கப் படங்கள் (2) கைவரைப் படங்கள் (3) ஒத்திசைவுப் படங்கள் (analogue)
(4) அச்சிடப்பட்ட படங்கள் (5) முப்பரிமாணப் (3 D) படங்கள் (……)

10. பூகோள நிலைப்படுத்தல் முறைமைத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி வரையப்படும் படமொன்றின் தனித்துவமான அம்சமானது,

(1) கணினி ஒன்றில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுகளைக் காட்சிப்படுத்தல்
(2) சிறிய நிலப் பகுதியொன்றில் காணப்படும் பல்வேறு புவியியல் அம்சங்களைத் தெளிவாக முன்வைத்தல்
(3) முப்பரிமாண நிலக்காட்சியின் மூலம் இடவிளக்கவியல் அம்சங்களின் உண்மையான அமைவிடத்தைக் காட்டுதல்.
(4) தரையிலுள்ள ஏதாவது ஓரிடத்தின் உண்மையான அமைவிடத்தினைக் காட்டுதல்
(5) தரையிலுள்ள புவியியல் அம்சங்களின் சார்பளவிலான அமைவிடத்தினைப் பகுபாய்வு செய்தல் (……)

11. பின்வருவனவற்றுள் எது, வளிமண்டலச் சுற்றோட்டப் பாங்குகள் பற்றிய ஆய்வில் ஆரம்ப காலப் பங்களிப்பினை வழங்கிய மூன்று காலநிலையியலாளர்களின் பெயர்களைச் சரியாகத் தருகின்றது ?

(1) ஹட்லி, பெரல், றொஸ்பி (2) பெரல், றொஸ்பி, ரெவார்த்தா
(3) றொஸ்பி, ரெவார்த்தா, கெப்பன் (4) ரெவார்த்தா, ஹட்லி, மில்லர்
(5) தோண்வைற், ரெவார்த்தா, ஹட்லி (……)

12. பின்வருவனவற்றுள் எது, வளிமண்டல வாயுக்களின் சேர்க்கையை இறங்கு வரிசையில் சரியாகத் தருகின்றது ?

(1) (A) நைதரசன் (B) ஒட்சிசன் (C) மெதேன் (D) கீலியம்
(2) (A) நைதரசன் (B) ஒட்சிசன் (C) கீலியம் (D) காபனீரொட்சைட்
(3) (A) நைதரசன் (B) ஒட்சிசன் (C) மெதேன் (D) ஓசோன்
(4) (A) நைதரசன் (B) ஒட்சிசன் (C) ஆர்கன் (D) காபனீரொட்சைட்
(5) (A) நைதரசன் (B) கீலியம் (C) காபனீரொட்சைட் (D) ஓசோன் (……)

(பக். 3 ஐப் பார்க்க

13. பின்வருவனவற்றுள் எது, பூகோள வெப்பமடைதலுக்குப் பங்களிக்கும் மூன்று பிரதான பச்சை வீட்டு வாயுக்களின் பெயர்களை, அவற்றின் சதவீதப்படி இறங்கு வரிசையில் தருகின்றது ?
   (1) காபனீரொட்சைட், மெதேன், நைதரஸ் ஒக்சைட்
   (2) காபனீரொட்சைட், குளோரோபுளோரோ காபன்கள், மெதேன்
   (3) குளோரோபுளோரோ காபன்கள், மெதேன், நைதரஸ் ஒக்சைட்
   (4) மெதேன், நைதரஸ் ஒக்சைட், நீராவி
   (5) மெதேன், நைதரஸ் ஒக்சைட், ஆர்கன் (......)

14. பின்வருவனவற்றுள் எது, பனிக்கட்டியாற்று அரித்தலினால் உருவாக்கப்படும் மூன்று நிலவுருவங்களைக் குறிப்பிடுகின்றது ?
   (1) தொங்கு பள்ளத்தாக்கு, வட்டக்குகை, கூர்முடி
   (2) வட்டக்குகை, கூர்முடி, நீள்குன்று
   (3) கூர்முடி, தொங்கு பள்ளத்தாக்கு, பக்கப்பனிக்கட்டியாற்றுப் படிவு
   (4) கூர்முடி, நீள்குன்று, எசுகர்
   (5) கூம்பகச்சிகரம், நீள்குன்று, பக்கப் பனிக்கட்டியாற்றுப் படிவு (......)

15. பின்வரும் நிலவுருவங்களில் எது, பாலைவனங்களில் நீரின் செயற்பாட்டின் விளைவாக உருவாகின்றது.
   (1) பஜாடா (2) தின்னல் பரல்கள் (3) யாடாங்கு (4) தளத்திடைக்குன்று (5) ஹமாடா (......)

16. பின்வரும் கூற்றுகளில் எது, பாறைகளின் இரசாயன வானிலையழிதல் செயன்முறையினைச் சரியாக விவரிக்கின்றது ?
   (1) நீரினால் கனிப்பொருள் துணிக்கைகள் கரைதல்
   (2) பாறைகளில் உள்ள வெடிப்புக்களில் நீர் உறைதல்
   (3) பாறைகளுக்கிடையில் தாவர வேர்கள் பரவுதல்
   (4) வெப்பத்தினாலும் குளிரினாலும் பாறைகள் உடைக்கப்படுதல்
   (5) உயரமுக்கத்தினால் பாறைகள் வெடிப்புக்குட்படல் (......)

17. 1999 இல் UNEP இன் பூகோள சூழலியல் அவுட்லுக் நிகழ்சித்திட்டத்தினால் அடையாளம் செய்யப்பட்டுள்ள உலகளாவிய சூழற் பிரச்சினைகள் இரண்டு,
   (1) காடழித்தல் மற்றும் கரையோர அரித்தல்
   (2) காலநிலை மாற்றம் மற்றும் உயிர்ப் பல்வகைமையின் இழப்பு
   (3) வளி மாசடைதல் மற்றும் கடல் மட்ட உயர்ச்சி
   (4) காடழிப்பு மற்றும் வெள்ளப் பெருக்கு அனர்த்தங்கள்
   (5) மண் தரமிழப்பு மற்றும் வரட்சி அனர்த்தங்கள் (......)

18. பின்வருவனவற்றுள் எது, இலங்கையின் வரண்ட வலயத்தின் நீர் வளப் பாதுகாப்பில் மரபுரீதியான கிராமிய குள நீர்ப்பாசன முறைமையின் வகி பங்கினைச் சரியாக விவரிக்கின்றது ?
   (1) நீர் மாசுபடுதலையும் நீரினால் பரவும் நோய்களையும் இழிவளவாக்குதல்
   (2) நீர் வளங்களின் தரத்தினை மேம்படுத்தலும் பாதுகாத்தலும்
   (3) பயனாளிகளின் மிகக் குறைந்த தேவைகளை எதிர்கொள்வதற்கு நீரினைச் சேமித்தல்
   (4) உத்தம மட்டத்தில் நீரினை விநியோகித்தல் மற்றும் வீண்விரயங்களைத் தடுத்தல்
   (5) பயனாளிகளினால் ஓர் உத்தம மட்டத்தில் பயன்படுத்துவதற்காக நீரினைச் சேமித்தல் (......)

19. இலங்கையின் மத்திய சூழலியல் அதிகாரசபையின் பிரதான செயற்பாடு,
   (1) கிராமிய சமூகங்களுக்கு, இயற்கை அனர்த்த முகாமைத்துவம் பற்றிய அறிவைப் பரப்புதல்
   (2) நகரப் பகுதிகளில் சூழல் நேய அபிவிருத்திச் செயற்றிட்டங்களை அமுலாக்குதல்
   (3) புதிய அபிவிருத்திச் செயற்றிட்டம் தொடங்கப்படுவதற்கு முன்னர் சூழலியல் தாக்க மதிப்பீட்டினை மேற்கொள்ளத் தீர்மானித்தல்
   (4) சூழலியல் முக்கியத்துவம் தொடர்பான "பாதுகாக்கப்பட்ட பகுதிகளைப்" பிரகடனம் செய்தல்
   (5) பிரதேச மட்டத்திலுள்ள சூழலியல் நிறுவனங்களைப் பதிவுசெய்தல். (......)

20. பின்வரும் கூம்பகங்களில் எது, குறிப்பிட்டதொரு சூழல் தொகுதியில் ஒட்டுண்ணிகளின் உத்தம மட்டத்தினைச் சரியாக அடையாளம் செய்கின்றது ?

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| △ | ▽ | △ | ▽ | ▽ |
| எண்ணிக்கை கூம்பகம் | எண்ணிக்கை கூம்பகம் | சக்திக் கூம்பகம் | உயிர்த்திணிவுக் கூம்பகம் | சக்திக் கூம்பகம் |

(......)

21. பால் விகிதம் என்பது,
   (1) குறிப்பிட்டதொரு சனத்தொகையில் தலா 1000 பெண்களுக்கு, ஆண்களின் எண்ணிக்கை
   (2) குறிப்பிட்டதொரு சனத்தொகையில் தலா 100 ஆண்களுக்கு, பெண்களின் எண்ணிக்கை
   (3) குறிப்பிட்டதொரு சனத்தொகையில் தலா 1000 ஆண்களுக்கு, பெண்களின் எண்ணிக்கை
   (4) குறிப்பிட்டதொரு சனத்தொகையில் தலா 100 பெண்களுக்கு, ஆண்களின் எண்ணிக்கை
   (5) குறிப்பிட்டதொரு சனத்தொகையில், 15 – 39 வருடங்களுக்கிடைப்பட்ட வயதில் தலா 100 பெண்களுக்கு, ஆண்களின் எண்ணிக்கை (......)

இங்கே வெட்டி அகற்றவும்

(பக். 4 ஐப் பார்க்க

22. பின்வருவனவற்றுள் எது, பசுமைப் புரட்சியுடன் தொடர்பான சரியான கூற்றினைத் தருகின்றது ?
    (1) காட்டுப் போர்வையின் தரத்தினை மேம்படுத்துவதற்கு விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்பத்தினை இது பயன்படுத்துகின்றது.
    (2) இது மாற்றத்தின் தனியான நிகழ்வன்றி, ஒரு தொடர்ச்சியான செயன்முறையாகும்.
    (3) IR 35 என அறியப்பட்ட புதியதொரு "அதிசய நெல்லின்" விருத்திக்கு இது பங்களித்துள்ளது.
    (4) 2000 ஆம் ஆண்டில், தென் ஆசியாவில் ஏறக்குறைய 98 சதவீதமான நெல் பயிரிடும் நிலங்களை உயர் விளைச்சல் தரும் இனங்களின் கீழ் இது கொண்டு வந்தது.
    (5) 1970 களில் இது மெக்சிக்கோவில் ஆரம்பித்து ஆபிரிக்காவின் உப சகாராவுக்கு ஊடாகப் பரவியது. (......)

23. பின்வருவனவற்றுள் எது, இலங்கையில் சமையலுக்கு மிகவும் அதிகமாகப் பயன்படுத்தப்படும் சக்தி மூலாதாரங்களை இறங்குவரிசையில் சரியாகக் குறிப்பிடுகின்றது ?
    (1) எல். பி. வாயு, மின்சாரம், விறகு
    (2) எல். பி. வாயு, விறகு, உயிரியல் வாயு
    (3) மண்ணெண்ணெய், எல். பி. வாயு, மின்சாரம்
    (4) விறகு, மின்சாரம், எல். பி. வாயு
    (5) விறகு, எல். பி. வாயு, மண்ணெண்ணெய் (......)

24. 2009 – 2010 காலத்தில் தெரிவுசெய்யப்பட்ட நான்கு நாடுகளுக்கான பெற்றோலிய உற்பத்தி (தலா நாளொன்றுக்கு 1000 பீப்பாய்களில்) கீழே தரப்படுகின்றது.
    (A) 8 450  (B) 3 920  (C) 2 325  (D) 2 165
    பின்வரும் விடைகளுள் எது, இப்புள்ளி விவரங்களுடன் தொடர்பான நாடுகளின் பெயர்களைச் சரியாகக் குறிப்பிடுகின்றது ?
    (1) (A) சவுதி அரேபியா (B) ஈரான் (C) அபுதாபி (D) குவைத்
    (2) (A) ஈராக் (B) சவுதி அரேபியா (C) ஈரான் (D) குவைத்
    (3) (A) சவுதி அரேபியா (B) குவைத் (C) பாகிரெயின் (D) ஈராக்
    (4) (A) ஈரான் (B) ஈராக் (C) குவைத் (D) பாகிரெயின்
    (5) (A) ஈரான் (B) அபுதாபி (C) குவைத் (D) ஈராக் (......)

25. அவுஸ்திரேலியாவில் "நாட்டின் இயந்திரம்" என அறியப்பட்ட இரும்பு உற்பத்திப் பகுதி,
    (1) தென் அவுஸ்திரேலியாவின் வையாலியா பிரதேசம்
    (2) மேற்கு அவுஸ்திரேலியாவின் பில்பரா பிரதேசம்
    (3) குயின்ஸ்லாந்து பிரதேசம்
    (4) நியூசவுத்வேல்ஸ்
    (5) காபென்ரேரியா குடாவினைச் சூழ்ந்துள்ள வடக்கு ஆள்புலப் பகுதி (......)

26. இங்கு தரப்பட்டுள்ள படத்தில் இந்தியாவின் முக்கியமான நான்கு கைத்தொழில் மையங்கள் A, B, C மற்றும் D என குறித்துக் காட்டப்பட்டுள்ளன. பின்வரும் விடைகளுள் எது அவற்றின் பெயர்களைச் சரியாகத் தருகின்றது ?
    (1) (A) இந்தூர் (B) யாம்செட்பூர் (C) பெங்கலாரு (D) கைதராபாத்
    (2) (A) பிலாய் (B) நாக்பூர் (C) இந்தூர் (D) கைதராபாத்
    (3) (A) யாம்செட்பூர் (B) நாக்பூர் (C) பெங்கலாரு (D) ரூர்கெலா
    (4) (A) அகமதாபாத் (B) பத்ராவதி (C) போபால் (D) நாக்பூர்
    (5) (A) அகமதாபாத் (B) யாம்செட்பூர் (C) பத்ராவதி (D) நாக்பூர் (......)

27. இலங்கை மத்தியவங்கி வருடாந்த அறிக்கையின்படி, 2010 இல் அதிக எண்ணிக்கையிலான கைத்தொழில் முயற்சிகளைக் கொண்ட மாவட்டங்களின் (கொழும்பு தவிர்ந்த) பெயர்கள் இறங்கு வரிசையில்,
    (1) கம்பகா, குருநாகல், காலி
    (2) காலி, குருநாகல், களுத்துறை
    (3) கம்பகா, காலி, களுத்துறை
    (4) கம்பகா, களுத்துறை, காலி
    (5) களுத்துறை, கேகாலை, குருநாகல் (......)

28. 2008 ஐக்கிய நாடுகள் வாழ்விடச் சூழல் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்று, 2025 இல் பெரு நகரங்களின் படிமுறை ஒழுங்கில் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது வரிசையை அடையும் என எதிர்வு கூறப்பட்டுள்ள பெரு நகரங்களாவன
    (1) டோக்கியோ, மும்பாய், மெக்சிகோ நகரம்
    (2) மெக்சிகோ நகரம், நியூயோர்க் – நிவாக், சாயோபோலோ
    (3) டோக்கியோ, மும்பாய், டெல்கி
    (4) டாக்கா, மெக்சிகோ நகரம், டோக்கியோ
    (5) டோக்கியோ, டெல்கி, டாக்கா (......)

29. "ஐரோப்பிய பொருளாதாரச் சமூகம்" (EEC) தனது பெயரை "ஐரோப்பிய ஒன்றியம்" (EU) என மாற்றம் செய்த ஆண்டு
    (1) 1990  (2) 1991  (3) 1992  (4) 1993  (5) 1994 (......)

30. பின்வருவனவற்றுள் எது, பிறிக்ஸ் (BRIC's) என அறியப்பட்ட கட்டமைப்பொன்றினை அண்மைக் காலத்தில் உருவாக்கிய நாடுகளின் பெயர்களைச் சரியாகக் குறிப்பிடுகின்றது ?
    (1) பிறேசில், ரூசியா, இந்தியா, சீனா
    (2) பிறேசில், ருமேனியா, இஸ்ரவேல், கனடா
    (3) பங்களாதேஷ், ரூசியா, அயர்லாந்து, சீனா
    (4) பங்களாதேஷ், ருவண்டா, இந்தோனேசியா, சாட்
    (5) பல்கேரியா, ரூசியா, ஈரான், கொலம்பியா (......)

※ ※

(பக். 5 ஐப் பார்க்க

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

14713

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
Geography I

22 T I

※ **முதலாம்** வினாவுக்கும், 2 ஆம், 3 ஆம் வினாக்களிலிருந்து **ஒரு** வினாவையும் தெரிந்தெடுத்து **இரண்டு** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ 1:50 000 அளவுத்திட்டத்திலமைந்த மகியங்கணை இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதியும், வரைபுத் தாளொன்றும் வழங்கப்படும்.

## பகுதி II

1. இலங்கை நில அளவைத் திணைக்களத்தினால் வெளியிடப்பட்ட 1:50 000 என்னும் அளவுத் திட்டத்திலமைந்த மகியங்கணை இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதி உமக்குத் தரப்பட்டுள்ளது. சமவுயரக் கோடுகளின் இடைவெளிகள் 20 மீற்றரினால் காட்டப்பட்டுள்ளன. இப்படத்தினை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

குறிப்பு:

※ **படத்தின் மேல் விடைகள் எழுதப்படலாகாது.**

※ விடைத்தாளில் தொடர்புடைய வினா இலக்கத்தினையும் அதன் உபபிரிவு இலக்கத்தினையும் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

※ உமது விடைத்தாளுடன் படத்தினை இணைக்க வேண்டாம்.

(i) மிகக்கூடிய உயரத்தினைக் காட்டும் திரிகோண கணித நிலையத்தினையும் இடவுயரம் காட்டும் மிகத் தாழ்ந்த உயரத்தினையும் அடையாளம் செய்து அதற்கேற்றவாறு படப் பகுதியின் உயர வீச்சினைத் தருக. (01 புள்ளி)

(ii) புள்ளி A யிலிருந்து B வரை நிலத்தின் குறுக்குவெட்டு ஒன்றினை வரைக. (03 புள்ளிகள்)

(iii) தரைதோற்றத்தின் **நான்கு** அம்சங்களையும், வடிகாலமைப்பின் **மூன்று** அம்சங்களையும் அடையாளம் செய்வதுடன், மேலே (i) மற்றும் (ii) இற்கான விடைகளைக் கருத்திற்கொண்டு நாற்பக்கல் இலக்கம் 1 இல் காணப்படும் பிரதேசத்தின் தரைத்தோற்றம் மற்றும் வடிகாலமைப்பு பற்றிய பகுப்பாய்வு ஒன்றினைத் தருக. (07 புள்ளிகள்)

(iv) சொரபொர வெவவின் வடிவம் மற்றும் பரப்பளவினைத் தீர்மானிக்கின்ற சமவுயரக் கோடு எது ? (01 புள்ளி)

(v) பிரதேசத்தின் நெற்செய்கைக்கு நீர் வழங்கும் **இரண்டு** பிரதான மூலாதாரங்களை அடையாளம் செய்க. (01 புள்ளி)

(vi) நெற் பயிர்ச்செய்கைக்கான நிலப்பயன்பாட்டிற்கும் நீர் வழங்கலுக்கும் இடையிலான தொடர்பினைக் குறிப்பான உதாரணங்களைப் பயன்படுத்தி ஆராய்க. (06 புள்ளிகள்)

(vii) மகியங்கணை நகரில் பிரதேசத்தின் விவசாயப் பொருளாதாரத்தின் மேம்பாட்டுக்கு உதவும் வகையில் ஸ்தாபிக்கப்பட்ட **இரண்டு** நிறுவனங்களை அடையாளம் செய்க. (01 புள்ளி)

2. (i) புவியியல் தகவல் முறைமை (GIS) நுட்பங்கள், எவ்வாறு புதிய படவரைகலையியலின் விருத்திக்குப் பங்களிக்கின்றதென்பதை விளக்குக. (04 புள்ளிகள்)

(ii) தொலையுணர்வு நுட்பங்களின் மூலம் சேகரிக்கப்படும் **மூன்று** தரவு வகைகள் யாவை ? (03 புள்ளிகள்)

(iii) மேலே (ii) இல் உம்மால் குறிப்பிடப்பட்ட தரவுகளைப் பயன்படுத்தி படங்களை அமைப்பதற்கு (Map constructions) புவியியல் தகவல் முறைமை நுட்பங்களைப் பிரயோகிப்பதனால் ஏற்படும் **மூன்று** அனுகூலங்களைப் பரிசீலிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க

(iv) ஒத்திசைவுப் படத்தினை (Analogue map) எண்ணிலக்கப் படமாக மாற்றும் மூன்று படிமுறைகள் கீழே காட்டப்படுகின்றன.



(A) (B) (C)

Contour Interval 20 m

இம் மூன்று படிமுறைகளையும் சுருக்கமாக விளக்குக. (03 புள்ளிகள்)

(v) எண்ணிலக்கப் படத்தின் **நான்கு** தொழிற்பாடுகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

3. 2004 – 2011 வரை இலங்கையில் கம்பகா மற்றும் மொனராகலை மாவட்டங்களில் பெரும் போகத்தின் (மகா பருவம்) நெல் உற்பத்தி (மெற்றிக் தொன்களில்) **அட்டவணை** 1 இல் காட்டப்படுகின்றது.

**அட்டவணை 1**

மகா பருவத்தின் நெல் உற்பத்தி (மெற்றிக் தொன்களில்)

| வருடம் | கம்பகா | மொனராகலை |
|---|---|---|
| 2004/2005 | 27 460 | 60 780 |
| 2005/2006 | 29 869 | 64 932 |
| 2006/2007 | 21 551 | 94 439 |
| 2007/2008 | 27 714 | 99 446 |
| 2008/2009 | 30 430 | 58 892 |
| 2009/2010 | 36 560 | 118 331 |
| 2010/2011 | 33 905 | 122 027 |

மூலம் : குடிசனக் கணிப்பு மற்றும் புள்ளிவிவரவியல் திணைக்களம், 2011

(i) அட்டவணை 1 இல் தரப்பட்டிருக்கும், 2004 தொடக்கம் 2011 வரை இலங்கையின் கம்பகா மற்றும் மொனராகலை மாவட்டங்களில் பெரும்போக நெல் உற்பத்தித் தரவுகளைப் பயன்படுத்தி, பின்வருவனவற்றைக் கணிப்பீடு செய்க.

(அ) சராசரி

(ஆ) சராசரியிலிருந்து எல்லா மாறிகளினதும் விலகல்கள்

(இ) சராசரி விலகல்

(ஈ) நியம விலகல் (08 புள்ளிகள்)

(ii) **அட்டவணை** 1 இல் தரப்பட்டுள்ள தரவுகளைப் பயன்படுத்தி கம்பகா மற்றும் மொனராகலை மாவட்டங்களின் நெல் உற்பத்தியின் காலரீதியான மாறுபாடுகளைக் காட்டுவதற்கு **இரண்டு** விலகல் வரைபுகளை அமைக்குக. (08 புள்ளிகள்)

(iii) கம்பகா மற்றும் மொனராகலை மாவட்டங்களின் நெல் உற்பத்தியின் சராசரி மற்றும் சராசரியிலிருந்தான விலகல்கள் ஆகியவற்றினை அடிப்படையாகக் கொண்டு இடஞ்சார்ந்த மற்றும் காலரீதியான மாற்றங்களை விளக்குக. (04 புள்ளிகள்)

* * *

14713

**22 | I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2011 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2011 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2011

භූගෝල විද්‍යාව I (II කොටස) (ප්‍රායෝගික භූගෝල විද්‍යාව)
புவியியல் I (பகுதி II) (செய்முறைப் புவியியல்)
Geography I (Part II) (Practical Geography)

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus




I : 50 000

සමෝච්ච රේඛා අන්තරය මීටර් 20
சமவுயரக்கோடு இடைவெளி 20 மீற்றர்
Contour Interval 20 m